# திகைக்க வைத்த எலும்பு

வில்லியம்  ஸ்டீக்

# THE AMAZING BONE

வில்லியம்  ஸ்டீக்,  தமிழ்: முனைவர்.ப.அனிதா

·WILLIAM STEIG·





அது ஒரு அழகான வசந்த காலம். ஊரே பச்சை பசேலென்று மரம், செடி கொடிகளும், வண்ணவண்ணமாய் பூத்துக்குலுங்கும் மலர்களுமாய் மின்னி, பெர்ல் (Pearl) என்ற குட்டி பன்னிக்கு மிகுந்த குதூகலத்தை அளித்தது. இந்த அழகான சூழலை ரசித்துக்கொண்டே, பள்ளியில் இருந்து வீட்டிற்கு மிகவும் நிதானமாக நடந்து சென்றாள் அவள்.




அருகாமையிலுள்ள சிறிய சந்தில் உள்ள அடுமனையில் சூடான பிரெட் சுடுவதை ஆவலுடன் பார்த்துக் கொண்டே நடந்தாள்.



பஜார் தெருவில் வயதானவர்கள் குதிரை லாயத்தில் வேலை செய்வதை வேடிக்கை பார்த்தாள்.



வேடிக்கை பார்ப்பதில் மனம் லயித்துப்போன பெர்ல், தன் வீட்டிற்கும், பள்ளிக்கும் இடையே இருக்கும் ஒரு சிறு காட்டுக்குள் புகுந்துவிட்டாள். பள்ளிக்குச் செல்ல தினமும் காட்டினைக் கடப்பது பழகிவிட்டதால், பெர்ல்லுக்கு எவ்வித பயமும் ஏற்படவில்லை. ரம்மியமான சூழலால் கட்டுண்டு, அங்கிருந்த ஒரு சிறு மணல்மேட்டில் அமர்ந்துக்கொண்டு, தன்னை ஒரு மலர் போலவும், தான் அணிந்திருந்த கவுன், மலரின் இதழ்களாகவும் கற்பனை செய்து மெய்மறந்திருந்தாள். “ஆஹா, இவை அனைத்தும் எனக்கு ரொம்பவும் பிடித்திருக்கின்றன”, என்று தனக்கு தானே சொல்லிக் கொண்டாள்.



“எனக்கும் தான்” என்று எங்கிருந்தோ அசீரீரியாய் ஒரு குரல் கேட்டது. திடுக்கிட்ட பெர்ல், குரல் வந்த திசையை கணிக்க இயலாமல், சுற்றும் முற்றும் பார்த்தாள். “நீ எங்கிருக்கிறாய்?” என்று குரல் கொடுத்தாள். “கீழே பார், உனது வலது புறத்தில், மரத்தின் கீழுள்ள பாறையின் பக்கத்தில் உள்ள பூச்செடிகளின் நடுவே உள்ள சின்ன எலும்புத்துண்டு தான் நான்” என்று தன்னைத் தானே அறிமுகப்படுத்திக் கொண்டது ஒரு எலும்புத்துண்டு. திகைத்துப் போன பெர்ல், தன் காதுகளையே நம்ப முடியாதவளாய், மெல்லிய குரலில், “நீ பேசுவாயா?” என்று அந்த எலும்புத்துண்டின் அருகே சென்று கேட்டாள். “ஓ! எனக்குப் பல மொழிகள் தெரியும்” என்று கூறி, ஸ்பானிஷ், ரஷ்ய, ஜெர்மானிய மொழிகளில் பேசிக்காட்டி பெர்ல்லை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது அந்த எலும்புத்துண்டு.



“என்னால் பல வகையான சப்தங்களையும் எழுப்பமுடியும்” என்று கூறிய அது, “படை வீரர்களை போருக்கு அழைக்கும் கொம்பொலியை எழுப்பியது, காற்றின் ‘உஷ்ஷ்’ ஒலியையும், படபடவென்று கொட்டும் மழையின் ஓசையையும் எழுப்பியது. பிறகு, மனிதர்களைப் போலவே குறட்டை விட்டு பெர்லை மேலும் ஆச்சர்யத்தில் ஆழ்த்தியது. “நீ ஒரு சாதாரணமான எலும்புத்துண்டு. உன்னால் எப்படி மனிதர்களைப் போல் குறட்டை விட முடியும்” என்றாள் பெர்ல். “எனக்குத் தெரியாது, நானா இவ்வுலகைச் படைத்தேன்? படைத்தவனைக் கேள்” என்று கிண்டலாக பதில் சொன்னது எலும்புத்துண்டு. “உன்னை என்னொடு, என் வீட்டிற்கு எடுத்துச்செல்லட்டுமா? என்று பெர்ல் ஆவலோடு எலும்புத்துண்டிடம் கேட்டாள். “தாராளமாக எடுத்துச் செல். நீண்ட நாட்களாக நான் தனிமையில் இருக்கிறேன். இந்த ஆகஸ்ட் மாதம் வந்தால், நான் தனியனாகி ஒரு வருடமாகிறது.



நான் ஒரு சூனியக்காரிக்கு துணையாக இருந்தேன். ஒரு நாள் நான் அவள் கூடையிலிருந்து தவறி வெளியே விழுந்துவிட்டேன். அவளும் கவனிக்காமல் சென்றுவிட்டாள். நானாவது அவளை அழைத்திருக்கலாம். ஆனால், அவளுடன் செல்ல எனக்கு இஷ்டம் இல்லை. அவள் தினந்தோறும் நத்தையை பூண்டுடன் சேர்த்து சமைத்து சாப்பிட்டாள். அந்த வாடை எனக்கு குமட்டலை கொடுத்தது. எப்பொழுதும் தன் மூட்டுவலியைப் பற்றி புலம்பிக்கொண்டேயிருந்தாள். என்னிடம் தேவையற்ற கேள்விகள் கேட்டு எரிச்சலூட்டினாள். அந்த சூனியக்காரியிடம் என் வாழ்க்கையை தொலைப்பதைவிட இந்த அழகான இளவரசியோடு என் மீதி காலத்தை கழிக்க ஆசையாக இருக்கிறது".

எலும்புத்துண்டின் இந்தப் பதிலை கேட்ட பெர்ல் உற்சாகத்துடன் அதை எடுத்துத் தன் கைப்பையில் வைத்துக் கொண்டாள். எலும்புடன் தொடர்ந்து பேசுவதற்கு வசதியாக, தன் கைப்பையை திறந்து வைத்தபடி, புத்தகப் பையை எடுத்துக்கொள்ளக்கூட மறந்து வீட்டை நோக்கி நடக்க துவங்கினாள் பெர்ல்.



தன் பெற்றோரிடம் இந்த பேசும் எலும்புத்துண்டை காண்பிக்க அவளுக்கு மிகவும் ஆவலாக இருந்தது. ஆனால், அவர்களின் கேலி, கிண்டலுக்கு தான் ஆளாகக்கூடும் என்பதை அவளால் ஊகிக்க முடிந்தது. “என்ன ஒரு அபாரமான கற்பனை உனக்கு”, என்று அம்மா அவளை நம்பாமல் கிண்டலாக சொல்லுவார்கள். அப்பாவும் அதையேத்தான் சொல்வார். ஆனால் அவர்கள் சற்றும் எதிர்பாரா விதமாய் எலும்புத்துண்டை பேச வைத்து இருவரையும் வியப்பில் திக்குமுக்காட செய்ய வேண்டும் என்று எண்ணினாள் பெர்ல்.

அது வசந்தகாலம் ஆதலால், காட்டின் நடுவில் பாய்ந்த சிறிய ஓடை சூரியக்கதிர்கள் பட்டு மினுமினுத்தது. தவளைகளும் பூச்சிகளும் விதவிதமாய் சப்தமிட்டன. “இது ஒரு அற்புதமான நாள், ஒரு பேசும் எலும்புத்துண்டை நான் கண்டெடுத்தது போன்ற பல விந்தையான விஷயங்கள் நடக்க ஏற்ற நாள்” என்று பெர்ல் கூற, “இல்லை, இல்லை, நான் உன்னை கண்டது போல” என்று பதில் சொன்னது எலும்புத்துண்டு.

ஆனால், அவர்களுடைய சந்தோஷம் வெகு நேரம் நீடிக்கவில்லை. உற்சாகமாக பேசியபடி வீட்டை நோக்கி நடந்து கொண்டிருந்தத பெர்ல் திடுக்கிடும்படி, ஒரு பாறைக்குப் பின்னால் இருந்து 3 வழிப்பறி ஓநாய்க் கொள்ளையர்கள் திடீரென்று தோன்றினர். அவர்களிடம் துப்பாக்கி, ஈட்டி போன்ற பயங்கர ஆயுதங்கள் இருந்ததைக் கண்டு பயத்தில் உறைந்து நின்றாள் பெர்ல். யாரும் அடையாளம் காணமுடியாதவாறு உடலை பெரிய அங்கியால் மறைத்து, முகத்தை மறைக்க முகமூடியும் அணிந்திருந்தனர் அந்த ஓநாய் கொள்ளையர்கள்.



மயிர்க்கூச்செறியும் குரலில் “மரியாதையாய் உன் கைப்பையை எங்களிடம் கொடுத்துவிட்டு ஓடிவிடு” என்று பெர்லை மிரட்டினர். பள்ளிக்குச் செல்லும் குட்டிப்பன்னியாதலால், கைப்பையில் விலையுயர்ந்த பொருள் எதுவும் இல்லை. வேறொரு சந்தர்ப்பமாக இருந்திருந்தால் கைப்பையை கொள்ளையர்களிடம் கொடுத்துவிட்டு “விட்டால் போதும்” என ஓடியிருப்பாள் பெர்ல். ஆனால், இன்று கைப்பையில் அவள் கண்டெடுத்த அற்புத எலும்புத்துண்டு இருந்தது. அதன்மேல் இருந்த ஆசை, அவளுக்கு தைரியத்தை கொடுத்தது.





“என்னால் கைப்பையை கண்டிப்பாக கொடுக்கமுடியாது” என்று பெர்ல் கறாறாக பதில் சொன்னாள். அவளுடைய இந்த தைரியம் அவளுக்கே ஆச்சரியமாய் இருந்தது. ஆசை வெட்கம் அறியாது என்று கூறுவது போல, ஆசை பயமும் அறியாது போலும். “அப்படி உன் கைப்பையில் என்னதான் வைத்திருக்கிறாய்?” என்று துப்பாக்கியை பெர்ல்லின் தலையை நோக்கி குறிவைத்தது ஒரு ஓநாய்.





எலும்புத்துண்டு, தன் பங்கிற்கு கொள்ளையர்களை மிரட்டும் தொனியில், “கைப்பையினுள் நானிருக்கிறேன்” என்று உறுமியது. ஓநாய்க் கொள்ளையர்களை மேலும் மிரளச்செய்ய, பாம்பைப் போல் சீறியும், சிம்மக்குரலில் கர்ஜித்தும் அசத்தியது. குரல் எங்கிருந்து வருகிறது என்று பார்க்கக்கூட திராணி இல்லாமல், அந்த ஓநாய்கள் அவ்விடத்தைவிட்டு “விட்டால் போதும்” என்று ஓடியே விட்டார்கள். அவர்கள், பயத்தில் தலைதெறிக்க எல்லா திசைகளிலும் சிதறி ஓடுவதைக் கண்டு பெர்ல்லும் எலும்புத்துண்டும் கைக்கொட்டி சிரித்தார்கள்.

நடந்தது பற்றி பேசி சிரித்துக்கொண்டு சென்ற பெர்ல்லின் குதூகலம் வெகுநேரம் நீடிக்கவில்லை. ஒரு பெரிய மரத்தின் பின்னால் இருந்து திடீரென்று ஒரு குள்ளநரி அவர்கள் முன் குதித்தது. சட்டைக் காலரில் பூங்கொத்து, கையில் அலங்காரமான ஊன்று கோளுடன் மிகவும் வசீகரமாக காட்சியளித்த அந்த குள்ளநரி, தன் வெண்பற்கள் தெரியும்படி இளித்துக் கொண்டே “அப்படியே நில்” என்று பெர்ல்லை மிரட்டியது.



“நெடுநாட்களாக உன்னைத் தேடிக் கொண்டிருக்கிறேன் உன்னைப் போன்ற சதைப்பிடிப்புள்ள இளவயது பிராணியை சமைத்து சாப்பிட்டால் மிகவும் சுவையாக இருக்கும்” என்று கூறிக்கொண்டே, பெர்ல் தப்பிக்க முடியாதபடி அவளை இறுக்கமாக பிடித்தது.



தன் தோழியை காப்பாற்றும் நோக்கத்தில், “அவளை விட்டுவிடு பொல்லாதவனே, இல்லையேல் உன் காதுகளை கடித்துத் துப்பிவிடுவேன்” என்று எலும்புத்துண்டு குள்ளநரியை மிரட்டியது. திடீரென்று வந்தக் குரலைக்கேட்டு திடுக்கிட்ட நரி, “யார் அது பேசுவது?” என்று மெல்லக் கேட்டது. “அகோரப்பசியில் இருக்கும் ஒரு முதலை. அதுவும், நரியின் கறித்துண்டுகளை மிகவும் ரசித்து உண்ணும் வழக்கம் கொண்ட முதலை!” என்று மிரட்டியது எலும்புத்துண்டு.



ஆனால், முன்னர் பெர்ல் எதிர்கொண்ட ஓநாய் கூட்டத்தை போல ஏமாறவில்லை இந்த குள்ளநரி. சாதுர்யமானது. சுற்றும் முற்றும் பார்த்து, முதலை எதுவும் இல்லை என்று தெரிந்துக்கொண்டு, பெர்ல்லின் கைப்பையில் இருந்து தான் குரல் கேட்கிறது என்பதை அனுமானித்து அதனுள் எட்டிப்பார்த்தது. “ஆஹா ! பேசும் எலும்புத்துண்டு ! இம்மாதிரியான அதிசயப்பொருள் ஒன்றை வைத்திருக்கவேண்டும் என்பது என்னுடைய நெடுநாள் ஆசை” என்று சந்தோஷமாக குதித்தது.



சற்றும் காலம் தாழ்த்தாமல், எலும்புத்துண்டை எடுத்து தன் பையினுள் வைத்துக்கொண்டு, பெர்ல்லை தனது வீட்டிற்கு தரதரவென இழுத்துச்சென்றது குள்ளநரி. “என்னை விட்டுவிடு” என்று மிரட்டி, கதறி, கெஞ்சி, அழுது புலம்பினாள் பெர்ல்.



எதையும் காதில் வாங்கிக்கொள்ளாமல், குள்ளநரி தன் வீட்டை நோக்கி நடந்தது. நரியிடம் போராடி களைத்துப்போன பெர்ல், ஈனஸ்வரத்தில் கெஞ்ச ஆரம்பித்தாள். "ப்ளிஸ், ப்ளிஸ், குள்ளநரியாரே எப்படியும் நான் இன்னும் கொஞ்ச நேரத்தில் உனக்கு இரையாகி சாகப்போகிறேன். அது வரையாவது, என் கடைசி ஆசையாக, அந்த எலும்புத்துண்டை என்னிடம் வைத்துக் கொள்கிறேனே", என்று கெஞ்சினாள். சிறுபிள்ளையின் கண்ணீர் குள்ளநரியின் கல்மனதையும் கரைத்தது. சரி போ, இன்னும் கொஞ்ச நேரம் தானே, நீயே வைத்துக் கொள்" என்று கூறிய நரி, தன் இளகிய(?!) மனதை நினைத்து தன்னைத்தானே மெச்சிக்கொண்டது.

மறுபடியும் பெர்ல்லின் கைப்பையினுள் தஞ்சம் புகுந்த எலும்புத்துண்டு, தைரியம் பெற்று, குள்ளநரியை திட்ட ஆரம்பித்தது. "இவ்வளவு சின்னஞ்சிறு குழந்தையை கொல்வதற்கு உனக்கு எப்படி மனசு வந்தது? உனக்கு வெட்கமே இல்லையா?" என்று கேட்டு குள்ளநரிக்கு குற்ற உணர்ச்சியை தூண்டிவிடப் பார்த்தது. ஆனால், குள்ளநரியோ, சற்றும் கவலைப்படாமல், சிரித்துக்கொண்டே, "நான் ஏன் வெட்கப்பட வேண்டும்? நான் படைக்கபட்ட விதமே இவ்வாறுதான்" என்று எகத்தாளமாக பதில் சொன்னது. எலும்புத்துண்டும், சற்றும் சளைக்காமல், "கோழையே, அரக்கனே" என்று. வசைப்பாடிக் கொண்டே இருந்தது".



சிறிது நேரத்திற்குப் பின், எலும்புத்துண்டின் தொடர் புலம்பலைக் கேட்டு எரிச்சலடைந்த நரி, "சீ! வாயைமூடு இல்லையேல் உன்னையும் தின்று விடுவேன். பேசும் சக்தியுடைய எலும்புத்துண்டு, அதை கடிக்கும் போது வலியால் கதறுவதை கேட்பது வேடிக்கையாக தான் இருக்கும்" என்றது.



இதைக் கேட்டதும், வாயை மூடிய எலும்புத்துண்டு, நரியின் வீட்டை அடையும் வரை திறக்கவே இல்லை. வீட்டை அடைந்ததும், குள்ளநரி பெர்ல்லையும் எலும்புத்துண்டையும் ஒரு அறையில் தள்ளி பூட்டியது. பெர்ல் சோர்வாக, தரையில் ஒரு மூலையில் அமர்ந்துக் கொண்டாள். பெர்ல்லை பார்ப்பதற்கே மிகவும் பாவமாக இருந்ததால், “நீ இப்போது எவ்வாறு உணர்கிறாய் என்று என்னால் புரிந்துக்கொள்ள முடிகிறது” என்று ஆறுதலாக பேச முயன்றது எலும்புத்துண்டு. “இப்போதுதான் நான் வாழவே ஆரம்பித்திருக்கிறேன். இவ்வளவு சீக்கிரமாக என் வாழ்க்கை முடிவதா? இதை தடுக்க எதுவுமே செய்ய முடியாதா?” என்று கேட்டது பெர்ல்

“ஏதாவது வழி கிடைக்குமா என்று நான் யோசித்துக்கொண்டு தான் இருக்கிறேன். ஒன்றும் தோன்றவில்லை. மிகவும் வெறுப்பாக இருக்கிறது” என்று பதில் சொன்னது எலும்புத்துண்டு. அதற்குள், சமையலறை பக்கமிருந்து ஏதோ சத்தம் கேட்டது. பெர்ல் பதறி, “என்ன சத்தம் அது? என்றதும், “அந்த மோசமான குள்ளநரி, கத்தியை தீட்டிக் கொண்டிருக்கிறது” என்று எலும்புத்துண்டு முணுமுணுத்தது.



“ஐயோ! கடவுளே”, என்று அரற்றியது பெர்ல். “இது விறகை அடுப்பில் அடுக்கும் சத்தம் போல் இருக்கிறது” என்று கூறி பெர்ல்லை மேலும் பீதியடைய செய்தது எலும்புத்துண்டு.



சமையல் அறையில் இருந்து எண்ணெய் காயும் வாசனையும், வினிகரின் வாசனையும் வந்தது. சாப்பிட பச்சடியும் (சலாட்) தயாராகிக் கொண்டிருந்தது போலும். அதீத துக்கத்தில், பெர்ல் எலும்புத்துண்டை தன் மார்போடு கெட்டியாக அணைத்துக்கொண்டு “நண்பனே எனக்கு ஆறுதலான வார்த்தைகள் ஏதாவது கூறு” என்று வேண்டியது. “நீ எனக்கு மிகவும் பிரியமானவள்” என்றது பெர்ல். “நீயும் எனக்கு பிரியமானவளே” என்று பதிலளித்தது எலும்புத்துண்டு.



அதற்குள், அறையின் கதவு திறக்கும் சத்தம் கேட்டு, இருவரும் கதவை நோக்கி திரும்பினர். பெர்ல்லுக்கு வார்த்தைகள் தொண்டையிலேயே சிக்கிக்கொண்டன.



குள்ளநரி, பெர்லை சமையல் அறைக்கு இழுத்துச் சென்றது. அங்கு அடுப்பில் தீயைக் கண்டதும், பெர்லின் பாதி உயிர் பிரிந்துவிட்டது. “உன்னைக் கொல்வது எனக்கும் கஷ்டமாகத்தான் இருக்கிறது” என்று முதலைக் கண்ணீர் விட்டது அந்த நயவஞ்சக நரி.



திடீரென்று **“யிப்பாம்”** என்று ஒரு வார்த்தையை தன்னிச்சையாக சொன்னது எலும்புத்துண்டு. மந்திரச்சொல்லை போன்று ஒலித்த அந்தச் சொல்லை கேட்டு ஸ்தம்பித்த நரி. “என்ன அது?” என்று கேட்டது. **“யப்பாம் சிபிப்லெல்”** என்றது எலும்புத்துண்டு. **“ஜிப்ரக்கெய சிபிப்பில் டிக்ரே”** என்று எலும்புதுண்டு மேலும் சொல்லும் போதே, அங்கு ஒரு ஆச்சரியமிக்க அதிசயம் நடந்தது. குள்ளநரி சுருங்கி, சில அங்குலங்கள் குட்டையானது!

“**அலபம் சிணூக் பெபோப்பிட் கிபோசல்**” என்று எலும்புத்துண்டு தொடர, பொல்லாத குள்ளநரி மென்மேலும் சிறியதாகி, ஒரு குட்டி முயலின் அளவிற்கு சுருங்கிவிட்டது. நடப்பது எதனையும் அங்கிருக்கும் யாராலும் நம்பமுடியவில்லை.



எலும்புத்துண்டு, “**அடூநிஸ் இஷ்கோடக் கீகோக்கின் யிப்பாய்**” என்ற போது, குள்ளநரி, அது அணிந்திருந்த உடையோடு ஒரு சுண்டெலியின் அளவிற்கு சுருங்கியது. “**ஸக்ரபூநிட்**” என்று எலும்புதுண்டு கட்டளையிட்டதும், சுண்டெலி, அதாவது அந்த சுருங்கிய குள்ளநரி, சுவரில் இருந்த ஒரு சிறிய பொந்தில் நுழைந்து மறைந்தது.



குள்ளநரியிடம் இருந்து தப்பித்து உயிர் பிழைத்த சந்தோஷத்தில், “உன்னால் மாயாஜால வித்தை கூட செய்ய முடியுமென்று எனக்கு தெரியவே தெரியாது” என்று கூறியது பெர்ல், “எனக்கும் தான் தெரியாது” என்றது எலும்புத்துண்டு. “ஓ! அப்படியா? அப்போது எப்படி திடீரென்று அந்த மந்திர சொற்களை சொன்னாய்?” என்று பெர்ல் கேட்க, “உன் கேள்விக்கு எனக்கு பதில் தெரிந்தால் நன்றாகத்தான் இருக்கும். ஆனால் எனக்கு தெரியவில்லை. மூளையின் ஏதோ ஒரு மூலையில் இருந்து அந்த வார்த்தைகள் ஞாபகம் வந்து, எனது உதடுகள் அனிச்சையாக அவற்றை உச்சரித்தன. அந்த சூனியக்காரியுடன் நான் இருந்தபொது, அவளிடமிருந்து இந்த வார்தைகளை என்னையறியாமல் கற்றுக் கொண்டேன் போலும்” என்றது எலும்புத்துண்டு. “என்ன ஒரு விந்தையான எலும்புத்துண்டு நீ, என்ன ஒரு மறக்க முடியாத நாள் இது !” என்று ஆச்சர்யப்பட்டது பெர்ல்.



பள்ளியை விட்டு கிளம்பி வெகு நேரமாகிவிட்டமையால், மேலும் எந்த ஆபத்தையும் சந்திக்கும் முன் வீட்டிற்கு சென்றுவிட வேண்டும் என்று எண்ணி எலும்புத்துண்டை கையில் எடுத்துக்கொண்டு அவசரமாக வீட்டை நோக்கி நடக்க துவங்கினாள் பெர்ல். வீட்டை அடைவதற்குள் இருட்டாகி விட்டது. கதவைத்திறந்ததும் பெர்லின் பெற்றோர், அவளை ஆரத்தழுவி, “எங்கு சென்றுவிட்டாய் நீ? நாங்கள் இருவரும் கவலையுடன் காத்துக்கிடந்தோம்” என்று பெர்லிடம் விசாரித்தனர்.



பெர்ல்லுக்கு மாலையில் நடந்த வினோத நிகழ்வுகளை தன் பெற்றோருக்கு எப்படி புரியவைப்பது என்றே தெரியவில்லை. தன் கையில் இருந்த எலும்புத்துண்டை காண்பித்து. “நான் பள்ளியில் இருந்து வரும் வழியில் கண்டெடுத்த இந்த எலும்புத் துண்டினால் பேச முடியும்” என்று ஆரம்பித்து, அம்மாலையின் நிகழ்வுகள் முழுவதையும் விவரிக்க ஆரம்பித்தாள். அவள் எதிர்பார்த்தபடியே, பெற்றோர் அவள் கதையை நம்பவில்லை. “என்னது? பேசும் எலும்புத்துண்டா? உன் கற்பனைக்கு அளவே இல்லாமல் போய்விட்டது” என்றார் அவளுடைய தாய். ஆனால், அவர்களைத் தொடரவிடாமல், “உங்கள் மகள் அசாராதணமானவள், அபூர்வமானவள்” என்று எலும்புத்துண்டு குரல் கொடுத்தது. எலும்புத்துண்டு பேசுவதை கேட்ட அதிர்ச்சியில் இருந்து தன் பெற்றோர் மீள்வதற்கு முன் மாலையின் நிகழ்வுகள் முழுவதையும் சொல்லி முடித்தாள் பெர்ல். அவளுடைய பெற்றோருக்கு கேட்டதை எல்லாம் உள்வாங்கிக்கொள்ளவே வெகு நேரம் ஆகியது.



இச்சம்பவத்திற்குப் பின், எலும்புத்துண்டு பெர்ல் குடும்பத்தின் ஓர் முக்கியமான அங்கமானது. அதை ஒரு வெள்ளித்தட்டில் வைத்து அலமாரியில் வைத்தார்கள் பெர்ல்லின் பெற்றோர். பெர்ல் ஒவ்வோர் இரவும் படுக்கச்செல்லும் போது, எலும்புத்துண்டை தன்னுடன் வைத்துக் கொள்வாள். படுக்கையில் பெர்ல்லும், அவளுடைய உற்ற நண்பனான எலும்புத்துண்டும், அன்றைய நிகழ்வுகள் பற்றி பேசிக்கொண்டே தூங்குவர். சில நாட்களில், மெல்லிய குரலில் பாடியோ, யாழிசை ஒளியை எழுப்பியோ, பெர்ல்லை தூங்க வைத்தது எலும்புத்துண்டு. வீட்டில் உள்ள எல்லோருக்குமே பேச்சுத்துணையாய் இருந்தது எலும்புத்துண்டு. அந்த வீட்டில் இசையும் பாட்டும் அவர்கள் விரும்பும்போதெல்லாம் எலும்புத்துண்டின் மூலம் கிடைத்தது. சில சமயம் அவர்கள் விரும்பாத போது கூட!



**கால்டிகாட் ஹானர் புக்**